Registered No. M. 1229.

உ

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

# விவேகோதயம்

மதுரை மாணவர் செந்தமிழ்ச் சங்கத்தினின்று
வெளிவரும்

## மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

அறிவுடையார், எல்லாம் உடையார்; அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்"—திருக்குறள்.

தொகுதி ௨. { பிங்கள௵ கார்த்திகைமீ 1917௵ நவம்பர்மீ } பகுதி ம.

பொருளடக்கம்.


| | | |
|---|---|---|
| புதல்வர் கடமை:— | பத்திராதிபர் | 291 |
| விடுகதை வினா:— | இ. அரங்கசாமி | 295 |
| விநோதக்கூற்று:— | தியாகராஜன் | 296 |
| மௌனதேசிகர் ஓர் ஹாஸ்ய நாடகம் | ம. கோபாலகிருஷ்ணையர் | 297 |
| சாணக்யசாகஸம் என்னும் சந்திரகுப்த சரித்திரம் இரண்டாம் பாகம்:— | வி. பாலம்மாள் | 305 |
| விடுகதை வினாவுக்கு விடை:— | கு. நடராஜன் | 309 |
| சற்குணவல்லி:— | ரா. நாகசாமி | 310 |
| கல்விச் சிறப்பு:— | இ. ஸ்ரீ. கோவிந்தன் | 313 |
| திருக்கார்த்திகைப் பதிகம்:— | குமாரதாசன் | 314 |
| வள்ளுவர் நேரிசை:— | அரசஞ்சண்முகனார் | 315 |
| சமாசாரக்கொத்து:— | பத்திராதிபர் | 317 |
| புத்தக மதிப்புரை:— | ஷை | 318 |
| விளம்பரங்கள்:— | மானேஜர் | |


சொந்தக்காரர்:— ம. கோபாலகிருஷ்ணையர்

ம: கோபாலகிருஷ்ணையர் } பத்திராதிபர்.
வி: பாலம்மாள் }

திருமங்கலம் ஸ்ரீகிருஷ்ண விலாசம் அச்சியந்திரசாலை

வருஷ சந்தா ரூ. 2—0—0.] 1917. [தனிப்பிரதி அணா 3
வெளி நாடுகளுக்கு ரூ. 2—4—0.



மதுரை எக்ஸெல்ஸியர் பிரஸில் டைப்பில் மாத்திரம் அச்சிடப்பட்டது.

# விளம்பரங்கள்.

குறைந்த சந்தா! ஆர்டருக்கு முந்துங்கள்!!

## 1916-ஞு நவம்பர் மாதம் முதல் வெளிவருவது.

# கற்பகம்.

இது தமிழ்ப்பாஷையைப் பரவச் செய்து பொது ஜனங்களின் க்ஷேமத்திற்காக உழைக்கும்

## ஓர் இனிய செந்தமிழ் மாத சஞ்சிகை

வருஷ சந்தா தபால் சார்ஜ் உட்பட

**உள்நாட்டிற்கு 0—12—0 வெளி நாட்டிற்கு 1—0—0**

இதில் வித்தியா விஷயம், கல்வி, சாஸ்திரம், சுகாதாரம், வைத்தியம், விவசாயம், வியாபாரம், கைத்தொழில், வேதாந்தம் இராஜாங்க விஷயம், ஜனங்க சீர்திருத்தம், இராஜ பக்தி, நூதன கற்பிதங்கள், மதவிஷயம், சிறுவர் சிறுமிகளுக்கான விஷயங்கள், உலக அற்புதம், வர்த்தமானம், விநோதக் கூற்று முதலான அரும் விஷயங்கள் வித்வத்சிரோ மணிகளால் எழுதப்பட்டு வெளிவருவது.

ஒவ்வொருவரும் தங்கள் தங்களால் இயன்ற வரையில் சந்தாதாரர்களைச் சேர்த்துக்கொடுத்து நம் பத்திரிகையை ஆதரிக்குமாறு வேண்டுகின்றனம்.

N. B. பத்து சந்தாதாரர்களைச் சேர்த்துக் கொடுப்பவர்களுக்கு ஒரு வருஷப் பத்திரிகை இனும்.

மானேஜர்,
"கற்பகம்." புதுவை.

# மங்களம்.

---

இந்நாடகம், மதுரையிலுள்ள "எங்மென்ஸ் அமெச்சூர் அஸோஸியேஷன்" நடத்திய போட்டியில், பிற யாவினும் சிறந்ததாகத் தீர்மானிக்கப் பெற்றது. இயற்றியோரைப் பொற்பதக்கம் பெறச்செய்தது. இஃதொரு ஜனசார சிறு நாடகம். சங்க வருஷோத்ஸவ காலங்களில் இரண்டொரு மணிகளில் பலரும் மகிழ நடிக்கக்கூடியது. விலை அணா 4. வேண்டுவோர் "விவேகோதயம்" மானேஜர்க்கேனும், 12, ரெங்கசாமி சேர்வை சந்தில் உள்ள மேற்படி அஸோஸியேஷன் காரியதரிசிக்கேனும் எழுதுக.

---

## சொற்பப் பிரதிகளே உள்ளன.

| | |
|---|---|
| M. V. ரெங்கஸாமி ஐயர் இயற்றிய தமிழ் வியாஸங்கள். | 0–10—0 |
| விவேகோதயம் முதல் வால்யூம் | 3—0—0 |
| விவேகாநந்த ஸ்வாமிகள் எழுதிய கடிதங்கள் | 0—4—0 |
| செந்தமிழ் 10 ஆவது வால்யூம் | 7—0—0 |
| விவேகபானு 4ம் வால்யூம் | 2—0—0 |
| தேனும் தேனீயும், கற்பவனூம் | 0–10—0 |

ம. கோபாலகிருஷ்ணையர் மானேஜர், "விவேகோதயம்" மதுரை.

## அமிர்தாரணவ லேகியம்.

இந்த லேகியம் ரத்தத்தை சுத்தி செய்து விர்த்தியாக்கி, நரம்பு ஸ்தானங்களை எல்லாம் பலப்படுத்தி, தேகச் சூடு, பித்தவாயு, கைகால் கண்எரிச்சல், இவைகளைச் சமனஞ் செய்து, மூளையைக் குளிரப்பண்ணி, தேக பலத்தையும் மேனியையும் உண்டாக்குகின்றது. மேலும் இம்மருந்து நாள்பட்ட க்ஷயம், கிரஹ்ணி, நீடித்ததலைநோய், மார்பு வலி முதலிய வியாதிகளையும் கண்டிக்கின்றது. எவ்வித பத்தியமுங் கிடையாது.

20-தோலா கொண்ட டப்பி 1-க்கு ரூபா 2—0—0

எங்கள் கியாட்லாக் இனமாய் அனுப்பப்படும்.

இனிமையானது! பரிமளமிகுந்தது!

# மணி ஆயில்.

முப்பத்தைந்து வருஷ காலமாய் விற்பனையாகி வருகிறது.

இந்தக் கூந்தல் தைலம் சாஸ்திர முறைப்படிசெய்யப்பட்டிருக்கிறது. அலங்காரத்துக்கு யோக்கியமான மனோகரமான சுகந்தமுள்ளது. சிரசில் உபயோகித்து வந்தால் ரோமங்களை உதிராமற்றடுத்து, நீண்டு அடர்த்தியாய் வளரும்படி செய்கிறது. தற்காலம் வெளிவந்துலாவும் தைலங்களைப் போல் கருதி விடக்கூடாது. ஒரு தடவையாவது வாங்கி உபயோகித்து உண்மையையறியுங்கள். சிரசுக்குத் தடவுவதனுல் மூளைக்குக் குளிர்ச்சியையுண்டுபண்ணக்கூடியது. இது ஒன்றுதான். புட்டி 1-க்கு ரூ 1. ஐந்து புட்டி ஒரு தடவையில் வாங்கினல் விலை ரூ-4. வி.பி.செலவு பிரத்தியேகம். இன்னும் விபரம் வேண்டுவோர் எங்கள் கியாட்லாக்குக்கு எழுதுங்கள்.

வைத்திய சாஸ்திரி,

**மணிசங்கர்கோவிந்தஜி,**

ஆதங்க நிக்கிரக ஔஷதாலயம்,

45=மேலக்கோபுரவீதி,

மதுரை.

# சர்வதேள் விஷ சஞ்சீவி.

## "கதறி வந்தவன் களிப்புடன் செல்வான்!"
## "விஷம் தீண்டினவன் நிமிஷத்தில் குணமடைவான்!"

## குணமில்லாவிட்டால் ரூ 100 இனும் கொடுக்கப்படும்.



நண்பர்களே! ஒவ்வொருவீட்டிலும் தேளினுடைய உபத்ரவம் பொறுக்க முடியாமல் அவஸ்தைப்படுவதை நாம் அனைவரும் கண்டு விசனமுற நேரிடுவதைப்பற்றி, நாம் அதிக கஷ்டப்பட்டு இதற்கர்க உயர்ந்த மருந்து கண்டுபிடித்திருக்கிறோம். இது அநேக ஐரோப்பிய டாக்டர்களர்லும், தமிழ் வைத்திய பண்டிதர்களாலும், நன்கு மதிக்கப்பெற்றது. எமது மேற்கண்ட லங்கர் மார்க்குள்ள சர்வதேள் விஷ சஞ்சீவியைத் தேள் கொட்டின விடத்தில் உபயோகிக்க உடனே ஒன்றிரண்டு நிமிஷத்திற்குள் குணமடையச் செய்யும். இவ் விஷ சஞ்சீவியை இன்னும் எலி, நாய், பூரான், செய்யான், பாம்பு, நண்டுத் தெறுக்கால் முதலிய எவ்வித விஷ ஜெந்துக்கள் தீண்டினும், டைரக்ஷனில் சொன்னபிரகாரம் உபயோகித்தால் குணமடையலர்ம். மேற் சொன்னவைகளுக்கு உபயோகித்து குணமில்லாவிடில், பணம் வாபீஸ் செய்து விடப்படும்.

இந்த சர்வதேள் விஷ சஞ்சீவியைக் கைப்பற்றுங்கள்: இவ்விஷ சஞ்சீவி ஒவ்வொரு வீட்டிலும் அவசியம் இருக்க வேண்டியது. ஏனென்றால், ஓர் மனிதனை இரவில் 12மணிக்கு நித்திரையில் விஷந் தீண்டி விட்டால், அம்மனிதன்எவ்வளவோ அவஸ்தைப்பட அநேகமருந்துகளையும் மந்திரங்களையும் உபயோகித்தும் பயன்படாமற் போகிறதல்லவா? அதற்காக இவ் விஷ சஞ்சீவி ஒவ்வொரு இல்லத்திலும் அவசியம் இருக்க வேண்டியது. அடியிற்கண்ட விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

**விலை பாக்கட் 1-க்கு 0—8—0**
**விலை பாக்கட் 12-க்கு 5—0—0**

**விலாசம்**

## வி. எ. எஸ். பாணி,

**3, இருளப்பன் வீதி,**

மதராஸ்.

உ
பொங்கும் மங்கலம் எங்கும் தங்குக.

# விவேகோதயம்.

மதுரை மாணவர் செந்தமிழ்ச் சங்கத்தினின்று
வெளிவரும்
மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

"அறிவுடையார், எல்லாம் உடையார்; அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்"—திருக்குறள்.

| | | |
|---|---|---|
| தொகுதி உ. | பிங்கள௵ கார்த்திகைமீ 1917௵ நவம்பர்மீ | பகுதி ௧௦. |

## புதல்வர் கடமை.

(263-ஆம் பக்கத் தொடர்ச்சி.)

விசுவநாதனது தாய், அவனைத் தந்தை மீது படையெடுத்துச் செல்லாதிருக்க, இவ்வாறு எவ்வளவு கூறியும், அவள் ஜபம் சிறிதும் சாயவில்லை. அறிவறிந்தவனும், பழிபிறங்காப் பண்புடை மகனுமான விசுவநாதன், அவள் கண்ணீரைத் துடைத்து,

"'தாய்சொற் றுறந்தால் வாசகமில்லை.'
என்பதை அறிவேன். எனினும் தாயே!
புன்னெறிக் குய்ப்பநீ புகன்றனை யாதலின்,
அறனிலா தவைசெய அடியேன் ஒருப்படேன்.
நம்நயங் கருதிநீ நவின்ற யாவையும்
நன்னய மாக நான்கொளேன் கொள்ளேன்.
உண்டவீட் டுக்கி ரண்டகம் செய்வது
பெருமையோ? துரோகமோ? பேசுதி அன்னாய்!
அக்கிர மத்தால் அடைந்தவை, நம்பால்
எத்துணைக் காலம் இருந்திடும்? எண்ணாய்.
மறச்செயற் றுயரால் மனம்பதை பதைத்திங்(கு)
இருப்பதைக் காட்டிலும் இறப்பது நன்றே.
'பொருதுவை யாயின் பொன்றுவன் தந்தை'
என்றனை யேநீ! என்றும் உயிருடன்
இருக்க வரம்பெற் றிருப்பவர் எவரே?
இவ்வுல கத்துள ஒவ்வொரு மனிதனும்
இன்றோ பின்றோ இறந்திடல் இயல்பே,

'யாண்டெனும் எய்த வேண்டிய சாவு
வந்திடும் காலை வந்தே தீரும்'
என்பதை அறிந்தும் ஏனோ மாழ்குவை?
எத்தனைச் சண்டைகள் இதுவன்ற எந்தை
எத்தனை வீரரோ டியற்றியுள் ளார்! அவர்
அப்பொழு(து) இறந்திருந் தால்என் செய்வம்?
ஆயினும் தாயே! நீயுளம் வருந்தேல்.
'தந்தையைக் கொன்றான் தநயன்' எனும் வசைக்
கிடமே யின்றி அடல்மிகு தந்தையை
உயிருடன் பிடித்துச், செயிரற, அரசன்
திருவடி சேர்க்கத் தீர்மா னித்துளேன்.
இதுவும் பிழையேல், ஈன்றோய்! பொறுத்தருள்.
அன்னாய்! 'எல்லாம் அவன்செய லே' யெனத்
தேறி யுணர்ந்தே ஆறுதல் அடைக."

என்னக் கூறி அவளிற் பிரிந்து, அதிவீரர்கள் அடங்கிய ஒரு பெருஞ் சேனையுடன், பாண்டியநாடு வந்து சேர்ந்தான். சோழவந் தானுக்கு அருகில் தந்தைக்கும் மகனுக்கும் கடும்போர் நிகழ்ந்தது. முடிவில் விசுவநாதன் நாகமனை முறியடித்து, பாண்டியனுக்கு முடிசூட்டினான். நாகமன் உயிர் அரிதிற் றப்பியது. விசுவநாதன் அவனது பாதங்களில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து,

"தந்தாய்! நினதிரு தாளிணை பணிந்தேன்.
வேந்தன் ஆணையை விரதமாக் கொண்டும்,
அறநெறி யொன்றையே அகத்தினில் உன்னியும்,
நினைச்சிறை செய்தேன். நிருபன்இத் தொழில்செய
எனையொழிந் தெவரையும் ஏவலா காதா?
எந்தாய்! என்னைத் தந்தாய்! நின்னை
வெம்பகை வனைப்போல் விலங்கிட நேர்ந்ததே!
ஆவ லுடன்சே வடியிணை பணிந்(து)எனைப்
பெற்றநின் னைத்தினம் பேணுநற் பாக்கியம்
அற்றமா பாவியான் ஆயினேன்! அந்தோ!
எனைப்பயந் தருளினோய்! வினைப்பயன் ஈதெலாம்.
தர்மசங் கடத்தால் தவிக்கின்ற தென்மனம்
மன்பெருங் குணத்தோய்! என்பிழை பொறுத்தி".

என்று கண்ணீர் விட்டுக் கரைந்தழுது, விஜயநகரில் நிகழ்ந்த யாவும் கூறினன். மைந்தனது பரிதாப நிலைமையையும், தன்னையங்கருதாத் தன்மையையும், "கடமை முரண்" நேர்ந்த காலையில் அவன் கடைப் பிடித்தொழுகிய அறநெறியையும் நாகமன் கண்டு, ஆனந்த பாஷ்பமே சொரிந்து, அவனைக் கட்டிக் கொண்டு,

"அரும் பெருங் குணத்தோய்! வருந்தலே. எனக்குத்
தவறெதும் செய்திலே. சத்தியம் பேணினே.
அரசனது நல் ஆணையை மீறியும்,
பாண்டியனைச்சிறைப் படுத்தியும் அவன் அர(சு)
எய்திய எனைச்சிறை செய்ததன் நிமித்தம்
உனைப் 'பித்ருத் துரோகி' யென் றுரைத்திடார் ஒருவரும்.
பேராசை யென்னும் பேய்பிடித் துந்தயான்
செய்யத் தகாதன செய்தேன். நீயோ,
இறைமொழி தன்னை மறைமொழி யாகவே
தாங்கினை. தவ்வுறு தாய்மொழி தள்ளினை.
உனைமக னாக உற்றிட, முன்னம்
எத்துணைப் பெருந்தவம் இயற்றி னேனோ?
'தந்தையிற் சிறந்தோன் மைந்தன்' என்பதினும்
பெருமை வேறெதும் பெற்றவர்க் குண்டோ?"

என்ன அவனைத் தேற்றினன்.

பிறகு விசுவநாதன் விஜயநகரம் சென்று, தந்தையை விலங்கிட்டவாறே கிருஷ்ணதேவராயனுமுன் நிறுத்தி, அவனை அரசனைப் பணியச் செய்து, மன்னனை நோக்கி, "வேந்தே!

அடியேற்(கு) ஆணையிட் டருளிய படிஎன்
ஐயனின் மறத்தொழில் அறவொழித் தவனைச்
சிறைசெய் தின் அடி சேர்த்தனன் சிறியேன்"

என்று பணிந்து கூறினன். விசுவநாதன்மீது, தான்கொண்ட விசுவாசம் வீண்போகவில்லை என்பதை யறிந்த விஜயநகர மன்னனுக்குண்டான மகிழ்ச்சிக்கு அளவேது? அரசன் அவனது வீரத்தையும், ராஜபக்தியையும் வெற்றியையும் வியந்து, "யான் பெறற்கரும் பேறே! நீ விரும்புவன கேள். நீ எது கேட்பினும் தருவேன்" என்

றன். விசுவநாதன் கண்ணும் கண்ணீருமாய் நின்று, (முன்பு தனது அருமைத் தாய்க்கு உயிர்ப்பிச்சை தருமாறு ஜமதக்நி முனிவரை வேண்டிய பரசுராமனைப் போன்று) தவறிழைத்த தன் தந்தைக்கு உயிர்ப்பிச்சை தருமாறு அரசனை வேண்டிநின்றான். பெருந்தன்மை மிக்க கிருஷ்ணதேவராயன், அவனது பிதுர்ப் பக்திக்கும் மெய்ச்சி, அவன் கேட்ட வரம் ஈய உடனே உவந்து ஒத்துக்கொண்டான். ஆயினும் நல்வழிப்பட்ட நாகமன் விம்மி விம்மியழுது, கிருஷ்ண தேவனது இருகால்களையும் இறுகப் பிடித்துக் கொண்டு,

"அடைந்தோர் தமைஆ தரித்திடும் அண்ணல்!
பன்னெடுங் காலம் பழகியும், பாவியேன்
துன்மதி வாய்ந்த துரோகிநிற் கானேன்.
செற்றமில் அரசே! உற்றறி யாது,நின்
சிந்தை புண்படச் செய்தது மறந்தி.
நன்றிகொன் றேனால், நாயினும் கடையேன்
எரிவாய் நரகமே எய்துதல் திண்ணம்.
இனியான் உலகில் இருந்திடல் தவறு.
நன்னெறி உன்னியே என்னையும் சிறைசெய்
வீர நற்குண விசுவ நாதனே,
தவறும் தாய்மொழி தள்ளிய புனிதனே,
எனைதரும் புதல்வனை நினைதரும் பேற்றினைப்
பற்றிய கவலையை முற்றிலும் ஒழித்தேன்.
எனக்(கு)எக் கவலையும் இலைஇனி. நிற்கு யான்
செய்த பாதகச் செய்கையை உனுந்தொறும்
தூண்டில் மீன்போல் துடிக்கின்றதென் உள்ளம்.
என்ன செய்வேன்! இனித்தா மர்(து) இத்
துரோகநா கமன்தலை துணித்து நிற்குள்ள
குறைமுடித் திடுதி இறைவ!எம் பெரும!

என்று கதறினன். இங்ஙனம் கதறியவனைக் கைதூக்கிப் பெருந் தன்மை மிக்க கிருஷ்ணதேவராயன்,

"ஓகோ! இதுவென்? நாகம! எழுக!
எவரும் பிழைசெயல் இயற்கை. அப் பிழைக்கா
வருந்தியோர் உள்ளம் திருந்தியோர் ஆவர்;

என்மனம் வருந்த நீ இயற்றிய எல்லாம்
தீதெனக் கண்ட மேதகை யோய்!கேள்:
வண்புனல் வார்த்து மாசுறு கலன்களைச்
சுத்தப் படுத்துவ தொத்துநின் பிழைகளைக்
கண்புனல் வார்த்துக் கழுவினை யாதலின்,
குற்றம் நீங்கினை. அற்றதென் சீற்றமும்.
வன்றிறல் நாகம! சென்றதற் கிரங்கேல்.
குட்டக் கொடுநோய் கொண்டுள மாந்தரை
இகழார் அறிஞர். இரங்குவர். ஆயினும்
அந்நோ யினையே அருவருத் தகல்வர்.
அதுபோல் அறிவும் அன்பும் வாய்ந்தநீ
மடமையிற் செய்த கோடுமையை முற்றும்
வெறுத்தேன் அன்றி, வெறுத்திலேன் நின்னை.''

என்று கூறி அவனுக்கு உயிர்ப்பிச்சை கொடுத்ததோடு, அவனை அவனது பழைய உத்தியோகத்திலும் நியமித்தான். அரசன் இத்துடனும் நிற்க வில்லை. சந்திரசேகரனது மந்திரியாக விசுவநாதனை நியமித்து, அவனைக் காத்து வருமாறும் செய்தனன். சந்திரசேகரனுக்குச் சந்ததியற்றுப் போகவே, கிருஷ்ண தேவராயன் விசுவநாத நாயக்கனிடம் தனக்குள்ள விசுவாசத்தை மற்றும் ஒருமுறை உலகோர்க்குக் காட்ட, தன் மகள் காஞ்சனையை அவனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்து, அவனையே மதுரைக் கரசனாக்கினன். இவ் விசுவநாதனே மதுரையை ஆட்சிபுரிந்த நாயக மன்னர் வம்சத்து முதல் அரசன். இவனது பிதுர்பக்தியை அறிந்து வியக்கும் பெரியீர்! இவனது ராஜபக்தி, ''கடமை முரண்'' நேர்ந்த காலத்தில் இவன் நடந்து கொண்டவிதம், ஆழ்ந்த அறிவு, ஆண்மைக் குணம் முதலிய நற்குணங்களையும் சிந்தித்து உணருங்கள்.

(இன்னும் வரும்.)

பத்திராதிபர்.

---

## விடுகதை வினா.

மூன்றெழுத்தில் ஓர்சொல்: முதல்இல்லையேல் 'கார் முகம்'ஆம்
ஏன்றஇரண் டாவதிலை யேல்'அம்பு'—மூன்றிரண்டும்
இல்லையேல் ஆகும் 'இறைவன்' என அன்பர்காள்!
சொல்லுமின் யாதோஇச் சொல்.

—இ. அரங்கசாமி.

## விநோதக் கூற்று.

ராஜமையர்:—முத்து செட்டி! இந்த வைரத்தைப் பாரு. எங்கே, எவ்வளவு பெறும் சொல்லு.

முத்துச் செட்டியார்:—(நன்கு சோதித்து) இதை எங்கே வாங்கினீங்க? எம்புட்டுக் குடுத்தீங்க?

ரா.—அதெல்லாம் நீயேன் கேக்கறே? நான் கேட்டத்துக்குச் சொல்லு பதில்.

மு. செ:—இது என்ன வைரம்னு வாங்கினீங்க? அவ்வளவு நல்லதில்லீங்களே இது.

ரா:—ஏன்? என்னத்தைக் கண்டு இப்படிச் சொல்றே?

மு. செ:—(ஐயர் கையில் பூதக் கண்ணாடி தந்து) நான் சொல்வானேன்? நீங்களே பாருங்க. நீரோட்டம் எவ்வளவு கம்மி! உள்ளே இருக்கிற மாசு மறுக்களையும் பாருங்க. போகட்டும். அளகாவாவது இருக்கா?

ரா:—அப்படியா? இருக்கட்டும். இது எவ்வளவு பெறும் அதைச்சொல்லு.

மு. செ:—100-ரூபா ஒராக்கலாம். அதிகமா 110-க்குப் பார்க்கலாம். அதுக்குமேலே காக்காசு கூடப் பெறாது.

ரா:—என்னடா நீ இப்படிச் சொல்றே? இது ரொம்ப ஒசந்ததாம்! நேக்காக அரணூறு ரூபாய்க்குத் தர்ரதாகச் சொல்ரான். நாலுபேரிட்டக் காம்பிச்சுட்டு வர்ரேன்னு சொல்லியிருக்கேன்.

மு. செ:—கடக்கரான் களவாணிப் பயல். எறியுங்கோ முதல்லெ தலெயெச் சுத்தி. நல்லதா நான் தாரேன்.

ரா:—நல்ல வேளை. இதெ ஒங்கய்யா வந்தோடனே பத்திரமாக் குடுத்துடு. பத்திரம்! பத்திரம்.

---

2. ஒரு துஷ்டப் பையன் ஒரு உபாத்தியாயர் முதுகில் அவரறியாமல் மை கொட்டி விட்டு நல்லவன் மாதிரி உட்கார்ந்து விட்டான். இது கண்டு பிள்ளைகள் கொல்லென்று சிரித்தார்கள்.

உபாத்தியாயர்:—(சினந்து) கழுதைகளா! என்னடா சிரிப்பு?

ஒருவன்:—ஒங்க பின்புறம் சட்டையும் வேஷ்டியும் கறுப்பாயிருக்கு ஸார்.

மற்றொருவன்:—ஆமாஸார். அது தாருபோல இருக்கு ஸார்.

உபாத்தியாயர் (பின்புறம் ஜில்லுப்பதை அப்போது தான் உணர்ந்து ஈரமான இடத்தைத் தடவி மோந்து பார்த்து) தாரில்லேடா இது. இது என்ன சனியனோ தெரியல்லியே.

வேறொருவன்:—ஆமா ஸார். தாரில்லே ஸார். தாருன்னா பிசுக்குன்னு இருக்கும் ஸார்.

பின்னொருவன்:—நேக்குத் தெரியும் ஸார், அது இன்னதுன்னு: அது மை ஸார்.

உபாத்தியாயர்:—ஆமடா. மை இங்கெங்கேடா வந்தது? இந்த சேஷ்டை செஞ்சவன் யாரேன்? நிஜத்தெச் சொல்லுங்க. இந்த விசை மாப்பு விட்டேன்.

மை கொட்டியவன்:—(முன் பேசியபையனை வெறித்து நோக்கிப் பிறகு வெகு சாவதானமாய்) போங்கடா போங்கோ. கண்டபடியொளராதேங்கோ. ஒங்க தாத்தா நாள்ளே, தாராகட்டும் மையாகட்டும், இப்புடித்தான் இருக்குமாக்கும்? (உபாத்தியாயரை நோக்கி) இல்லே ஸார். அது ஒங்க வேர்வே ஸார். அதனால் தான் ஸார் இவ்வளவு கறுப்பு. வேர்வெ கொட்ரபோது ஒங்க மேலெல்லாம் கரஞ்சு போயிருக்கு ஸார்.

உபாத்தியாயர்:—யூ! தடியேன்! ஒக்கார். ஒக்கார். —தியாகராஜன்.

## மௌன தேசிகர்-ஓர் ஹாஸ்ய நாடகம்.

### காட்சி—2.

இடம்—அரண்மனையில் ஓர் அறை. காலம்.—முற்பகல், பாத்திரங்கள்.— தற்புகழ்மாறனும், சமயோசிதனும்.

தற். (கவலையுடன்) "யா காவராயினும், நா காக்க; காவாக்கால் சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு" என்று தெரியாமலா பெரியோர்கள் சொல்லி யிருக்கிறார்கள்? நான் ஏன் வீண் பெருமை பேசவேண்டும்? இல்லாது சொல்லித் தன் சொல் லாலே துயர்ப் படுக்கும் பேதை என்னினும் வேறு உண் டோ? இனி என்ன செய்யலாம்? என் அந்தரங்க நண்பனும் மந்திரியுமாகிய சமயோசிதன்கூட ஊரில் இல்லையே! அவன் இருந்தாலாவது எனக்குத் தக்க ஆலோசனை கூறுவன்.

[சமயோசிதன் வருகிறான்]

ஆ—நல்லவேளை. அவனும் அதோவந்து விட்டான். (வெளிப் படையாய்) மந்திரி! வாரும். இப்படி உட்காரும்.

சம. (அரசனை வணங்கி) அரசே! என்ன விசேஷம்? ஒரு மாதிரி யாக இருக்கிறீர்களே?

தற். சமயோசிதரே! இப்பொழுதுதான் நீர் உமது பெயர்ப் பொ ருள் விளங்க ஓர் சமயோசித யோசனை கூறவேண்டும். நான் சொல்வதைச் சற்றுக் கவனமாய்க் கேளும். நம் நாட்டில் உள்ள சோழராஜதூதன் சமிக்ஞா வித்தையில் அதி நிபுண னும். இந்த இழவு எனக்குத் தெரியாது. அவன் 'இந்தப் பூலோகத்திலேயே ஒருவருக்கும் அபிநய வன்மை இல்லை. அதனைப் பயிற்றும் கலாசாலையும் போதகரும் கூடக் கிடை யாது' என்று, நேற்று என்னிடம் விடைபெற்றுத் தன்னூர் செல்லத் தொடங்குமுன் குறை கூறினன். எனக்கு அது பொறுக்க வில்லை. "நம் நாட்டிலும் அது இல்லை" என்றவார்த் தை கூடாதென்று ஒரு புளுகு புளுகினேன்—நம் பாளையங் கோட்டையில் ஒருவர் இருப்பதாகச் சாதித்தே விட்டேன்.

சம. (சிரிப்பை அடக்கிக் கொண்டு) அப்புறம்?

தற். ஏன் சொல்கிறீர்? அதனால் தான் கஷ்டமெல்லாம். அவன் நான் சொல்லியது உண்மை யென்றே நம்பி விட்டான்.

அரை க்ஷணங்கூட அப்புறம் தாமதிக்கவில்லை. உடனே புறப்பட்டு விட்டான் பாளையங் கோட்டைக்கு. எவ்வளவோ சொல்லித் தடுத்துப் பார்த்தேன். பயனில்லாமற் போய் விட்டது. உண்மை வெளிப்பட்டு விட்டால் அதனினும் அவமானம் உண்டோ? என்ன செய்யலாம்? சொல்லும். இப்படியும் ஒரு மூடனுண்டா?

சம.. (யோசித்து) பூபதி! இவ்வளவுதானு? இதற்குத்தானு இவ்வளவு கலக்கம்? நான் ஒரு யுக்தி சொல்லுகிறேன்: சமிக்ஞா நாதர் பாளையங்கோட்டை போய் சேருமுன் ஒரு காரியம் செய்யுங்கள்: இங்கு நடந்த விஷயங்கள் இன்னின்னவென்று எழுதி, "எவ்விதமாகவாவது சோழ ராஜாது தூதரைத் திருப்திப் படுத்த வேண்டியது உங்கள் கடமை. நாம் அதிகம் அறிவிக்க வேண்டியது அநாவசியம். காரியசித்தி பெற்று, நமது நன்குமதிப்புக்குப் பாத்திர ராவீர்களென நம்பி எதிர் பார்க்கிறோம்" என்று ஒரு லிகிதம் எழுதி, அதற்கு முத்திரையிட்டு, நம்பிக்கையுள்ள ஓர் ஆளை, அக் கடிதத்துடன், பாளையங்கோட்டைக்கு நம் கலாசாலை அதிபரிடம் அனுப்பி விடுங்கள். வித்யா பூஷணரும், அவர் கீழ் வேலைபார்ப்போரும், சும்மா இரார்கள். எப்படியேனும் சோழ ராஜ தூதரைத் திருப்தியே செய்து விடுவார்கள். மகா ராஜாவின் ஆக்ஞை சுக்ரீவ ஆக்ஞையன்றோ? இது எங்களுக் கெல்லாம் தெரிந்தது தானே? நிர்ச் சிந்தையாய் இருங்கள் நீங்கள். நீங்கள் மட்டும் தாமதமின்றி உடனே ஆள் அனுப்ப எனக்கு உத்திரவிடுங்கள்.

தற். நண்பரே! 'சமயோசிதன்' என்ற பெயர் உமக்குத் தகும்! தகும்!! சரி. எழுதும் லிகிதம்.

சம. யாரடா வேலைக்காரன்? [சேவகன் வருகிறான்.] நீ போய் நம் அதிவேகனை அழைத்துவா.

[சேவகன் போகிறான். மந்திரி கடிதம் எழுதி முடிக்கிறான். சிறிதுநேரத்திற்கெல்லாம் அதிவேகன் வணங்கி நிற்கிறான்.]

அடே அதிவேகா! (காகிதத்தை தந்து) இக்கடிதம் யார்க்குத் தெரியுமா?

அதி. (லிகிதம் வாங்கி) தெரிஞ்சுக்கிட் டேனுங்க—நம்ம பாளையங் கோட்டைப் பள்ளிக்கூடத்து எசமாங்களுக்குங்க.

சம. ஏய்! இதுமிகவும் ரகசியமான கடிதம். தவற விட்டுவிடாதே. எவருக்கும் தெரியவும் கூடாது. தெரியுமா? தலைப்பேன் தெறிக்க எடுக்கணும் ஓட்டம். வீட்டிற்குப்போ. சோத்தைத் தின்னு. ஏறு வேகமுள்ள குதிரையாப்பார்த்து. இங்கிருந்து பிடிக்கிறஓட்டம் அங்கு போய்த்தான் நிற்கணும்—ஊம்—கடிதம் ஜாக்கிரதை. தவற விட்டுவிடாதே. போ சீக்கிரம்.

அதி. எசமாங்க புத்தி.

(யாவரும் போகின்றனர்.)

காட்சி முடிகிறது.

## காட்சி—3.

இடம்—பாளையங்கோட்டைக் கலாசாலையில் ஓர் அறை. காலம்—பிற்பகல். பாத்திரங்கள்—வித்யாபூஷணன், தந்திரதீரன், அதிவேகன், வாசாலகன் முதலியோர்.

[அதிவேகன் கடிதம் கொடுத்துச் சென்றதும், கலாசாலையை அலங்கரிக்க ஏற்பாடு செய்து, இரண்டு மூன்று தினங்களாகப் பிரதி தினமும் ஸமிக்ஞாநாதனது வரவை அதி விசனத்துடன் எதிர்பார்த்துக் கொண்டு ஏதேதோ யோசித்து,]

வித். ஹே ஜகதீசா! இதுவும் உன் திருவிளையாட்டல் தானோ! இதற்கு யான் என்செய்வது? ஏழையேன் மீது கருணை காட்டலாகாதோ? அரசன் ஆக்ஞையை மீறுவ தெப்படி? ஹே கருணாநிதே! நீதான் இச்சமயம் என்னையும் என் மானத்தையும் காக்கவேண்டும். [தந்திரதீரன் வருகிறான்.]

தந். வித்வமணி! ஏன் ஈசனை வேண்டுகின்றனை? உனக்கு யாது இடுக்கண் சம்பவித்தது? கலாசாலையில் என்ன விசேஷம்? பிரமாத அமக்களப் படுகிறதே. இரண்டு மூன்று தினங்களாகத் தோரண அலங்காரம் எதற்காக?

வித். நான் என்ன சொல்லுகிறதென்று எனக்கே தெரியவில்லை. இக்கடிதத்தை நீயே வாசித்துப்பார். எல்லாம் தெரியவரும். [வாசிக்கிறான் கடிதத்தை.]

"ராஜாதி ராஜ, ராஜமார்த்தாண்ட, ராஜகம்பீர, ராஜகோலாகல, பாண்டியநாட்டதிபரும், சந்திரகுல திலகரும், மன்னர் மன்னருமாகிய மாட்சிமை தங்கிய நமது மகா ராஜா அவர்கள், பாளையங்கோட்டைக் கலாசாலையை நடத்தும் ஸ்ரீமான் வித்யா பூஷணர்க்கு இட்ட கட்டளை:—அபிநய சாஸ்திர நிபுணரும்,நம் நாட்டில் வசிக்கும் சோழராஜ தூதருமான ஸமிக்ஞாநாதப் பிரபு அவர்கள், மகாராஜா அவர்களுடன் சரசமாக நேற்றுச் சல்லாபிக்க நேர்ந்தபோது, குறிப்புணர்ந்து மெய்கை காட்டித் தம்முடன் அளவளாவ வல்லவர் இவ்வுலகிலேயே ஒருவருமில்லையென்று துணிந்து கூறினர். மகாராஜா அவர்கள், அவரது வீறாப்பை அடக்குமாறு, "நமது பாளையங்கோட்டைக் கலாசாலையில் மௌன தேசிகர் என்ற ஓர் மகான் இருக்கிறார்" எனச் சாதித்துவிட்டனர். சோழராஜ தூதர் அவர் ஓங்கியடித்ததை மெய்யெனவே நம்பி, அங்கு செல்லப் புறப்பட்டு விட்டார்.நாலைந்து தினங்களில்,அவர் அங்கு அவசியம் இருப்பர்.ஆதலின்,எவ்வாறேனும் அவரைத் திருப்திசெய்விப்பது உங்கள் கடமை. அங்ஙனம் செய்யாது, சிறுமையேதும் ஏற்படின், அதனால் விளையும் அவமானமும்,அவ் அவமானத்தாலுறும் பயனும், நாம் அறிவிப்பது அநாவசியமாகும். காரியசித்தி பெற்றமைக்கு மகாராஜா தங்கள் சடிதத்தை எதிர்பார்த்த வண்ணமாக இருக்கின்றனர்."

இங்ஙனம்
(மகாராஜா அவர்கள் உத்திரவுப்படி)
"சமயோசிதன்."

வித். (பெருமூச்சுடன்) பார்த்தனையா? இப்பொழுதெல்லாம் தெரிந்ததா? இந்த ஊமையனை யாராலேயடா சந்தோஷப் படுத்த முடியும்?இந்தச் சனியன் என் பிராணனைவாங்க 'எப்போது வரப்போகிறது' என்று வயிற்றில் கல நெருப்பைக் கட்டிக் கொண்டு இருக்கிறேன். இதற்கென்ன செய்கிறது? நீதான் தந்திரதீரனாயிற்றே. இதுக்கு ஒரு தந்திரம் சொல்லாயா?

தந். ஹூம்—இவ்வளவுதானா? நான் ஒருயுக்தி சொல்லுகிறேன். நம் கலாசாலையில் எத்தனை விநோதக்காட்சிகள் இருக்கின்

றன! அவைகளை ஒவ்வொன்றாக வருபவனுக்குக் காட்டி, வெகு நாழிகை போக்குவோம். பிறகு ஒருவனை அனுப்பி, 'நம் தேசிகர் ஊரில் இல்லை' யென்று சொல்லச் செய்து, அவனை இவ்வூரைவிட்டு ஒட்டிவிடுவோம். வந்தவனை எப்படியேனும் திருப்திப்படுத்தி யனுப்ப வேண்டுமென்றுதானே மகாராஜா கட்டளையிட்டிருக்கிறார்? அவனுடன் குறிப்புரையாடித் தோற்றால்த்தானே அவமானம்?

[ஒரு சேவகன் வருதல்.]

சேவ. (வித்யாபூஷணனைக் கும்பிட்டு) எசமான்! யாரோ நம்ம மகாராசாவிடமிருந்து வந்திருக்காங்களாம். பார்த்தாப் பெரிய பிரபு மாதிரி இருக்காருங்க. அவரோடுகூட சில ஆளுங்க வந்திருக்காங்க, அவுகளும் ராசா உடுப்போடு வந்திருக்காங்க.

வித் (தந்திரதீரனை நோக்கி) வந்துவிட்டானும் சனீசுவரன். நான் அவனுக்கு நல்வரவுகூறச் சொல்லுகிறேன். நீ காலதாமத மின்றி உன் யுக்திப்படி வாசாலகனுக்குக் கற்பித்து, மேல் நடக்க வேண்டிய காரியங்களைச் செய்துமுடி. போ சீக்கிரம். நம் அதிர்ஷ்டம் உள்ளபடி ஆகிறது. சீக்கிரம் நீயும் வந்துவிடு. நீ வந்தால் தான் எனக்குக் கொஞ்சம் தைரியமாயிருக்கும்.

தந். நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். பத்தே நிமிஷத்தில் வந்துவிடுகிறேன்.

[தந்திரதீரன் வாசாலகனுக்குக் கற்பிக்கவும், வித்யாபூஷணன் சமிக்ஞாநாதனுக்கு நல்வரவுகூறவும் செல்லுகின்றனர்.]

காட்சி முடிகிறது.

---

## காட்சி—4

இடம்.—கலாசாலை. காலம்.—பிற்பகல். பாத்திரங்கள்.—ஸமிக்ஞாநாதன், வித்யா பூஷணன், தந்திரதீரன், வாசாலகன், பிரபுக்கள் முதலியோர்.

வித். (சமிக்ஞாநாதனையும் பிரபுக்களையும் உரிய ஆசனங்களில் அமரச் செய்து) "மாட்சிமை தங்கிய எங்கள் மகாராஜ சக்கரவர்த்தியவர்களது ஆப்தநேசரும், அவரது சம்பந்தியுமான, சோழ சக்கரவர்த்தியாரது, ராஜ தூதரும் ஸ்தானாதிபதியுமான தங்களுக்கு, நாங்கள் ஏகோபித்து நல்வரவு கூறுகிறோம். சரித்திரப் பிரதானமும் நம் போன்ற சைவ வைஷ்ணவர்களுக்கு மகிழ்ச்சியுடன் ஞாபகம் வரக்கூடியதுமான இச்

சாலீவாடீசுவரபுரத்திற்குத் தாங்கள் விஜயம் செய்த 'இன்றே நன்னாள். நன்றே இந்நாள்' எனக் கொண்டு மகிழ்கின்றோம். தங்கள் நல்வரவால், சோழ பாண்டிய மன்னர்கட்குப் பரஸ்பரம் உள்ள நேசவிசுவாசம் முன்னினும் அதிகரித்து, அவை இருநிலம்பிளக்க வேர் வீழ்க்கும் என்பதே எமது துணிபு.

சமி. பேரன்பு வாய்ந்த பெரியீர்! உங்கள் மெய்யன்புக்கு வந்தனம். நம் இரு ராஜாங்கத்தாரது நட்பும் வலிமையும் ஓங்க நானும், உங்களுடன் கடவுளை வேண்டுகின்றேன். நான் இங்கு ஓர் அதி முக்கிய காரியமாக வந்திருப்பதால் உங்களோடு அதிக நாழிகை இருந்து அளவளாவ முடியாமைக்கு விசனிக்கிறேன். ஆயினும் உங்கள் உள்ளக் கிடக்கையையே நீங்கள் செய்துள்ள உபசாரங்களாகக் கொண்டு மகிழ்கின்றேன். எங்கள் மகாராஜாவிடம் நீங்கள் கொண்டுள்ள நன்குமதிப்பு ஒரு போதும் என் மனதை விட்டகலாது. சீரும் செல்வமும் ஓங்கி, நம் ராஜ்யங்கள் இரண்டும் முன்னினும் ஒற்றுமையுடன் வாழக் கடவுள் கருணைபாலிப்பாராக.

[சமிக்ஞா நாதனுக்கு மாலை புனைந்ததும், பள்ளிக்கூட அதிசயங்களைப் பார்க்க, வித்யாபூஷணன், அனைவரையும் அழைத்துச் செல்கிறான்]

வித். பிரபு! பார்த்தீர்களா! இதுதான் தத்துவ போதக அறை— வாருங்கள் இப்படி. இதுதான் எங்கள் மகாராஜாவின் தந்தையாரது திருவுருவப்படம். முன்னமேயே அவரது சிலா ரூபத்தை மதுரையில் கண்டிருப்பீர்களே. அவர்களுடைய கண்ணொளியைப் பார்த்தீர்களா? என்ன கம்பீரம் பாருங்கள்.—அதோ தெரிகிறதே, அதுதான் வானசாஸ்திரக் கருவிகள் இருக்கும் இடம்—இங்கே வாருங்கள், இதை நான் காட்டவில்லையே. இதுதான் காட்சி பங்களா—என்ன அழகாக இருக்கிறது! 3லக்ஷம் ரூபாய்க் கதிகமாக இது சம்பந்தமாய்ச் செலவழிக்கப் போகிறோம். தங்கள் ஊரிலிருப்பதற்கும் இதற்கும் உள்ள பேதத்தை அறிய அவாக்கொண்டிருக்கிறோம். இதுதான் உயிர்நூல் நிலையம்—இதுதான்—

சமி. வித்யாபூஷணரே! மன்னிக்க வேண்டும். நான் மற்றுமொரு முறை இவ்விடம் வரும்படியாயிருக்கும். அப்பொழுது இவைகள் யாவையும் பற்றிச் சாவகாசமாகப் பார்த்துப் பேசிக்கொள்வோம். முதலாவது நான் வந்தகாரியம் நிறைவேறட்டும். தங்கள் மகாவித்வான் மௌனதேசிகரைத் தரிசிக்க விரும்புகிறேன். சீக்கிரம் நாம் அவரிடம் செல்வோம்.

அவரைக் காணவே நான் இங்கு வந்தது. உங்களையும் கண்டேன். சந்தோஷம். அவரை அழைத்து வரத் தயை செய்து ஒரு ஆள் அனுப்புக.

வித். பிரபு! இது தாங்கள் சொல்லவா வேண்டும்? தாங்கள் வந்த மறுநிமிஷமே அவரை அழைத்துவர ஆள் அனுப்பி விட்டேனே. அவர் வருகிற சமயமாய் விட்டது. ஆ! அவர்க்காகச்சென்ற ஆள் அதோ வருகிறான். (ஓடி வரும் வாசாலகனை நோக்கி) என்ன, இவ்வளவு நாழிகையா? முட்டாள்!.

சமி. நாழிகையானாற் பரவாயில்லை. கோபிக்கவேண்டாம். அவர் வீட்டைவிட்டுப் புறப்பட்டுவிட்டாரென்றெண்ணுகிறேன்.

வாசா. அதானே சொல்லவந்தேன்—எசமாங்களே! ஐயா ஊரிலே இல்லேன்னு, அம்மாங்க சொன்னாங்க.

வித். (அதிர்ப்தி யுற்றவன்போல் நடித்து) என்ன! என்ன!! ஊரில் இல்லையா? பிரபு! தாங்கள் நினைத்த காரியம் நிறைவேறாமல், இப்பொழுது தாம் ஊர்திரும்ப நேர்ந்தமைக்குநாங்கள் மிகவும் விசனிக்கிறோம். (வேறுபக்கம் திரும்பி) இருக்கட்டும்—இதா மரியாதை? 'விநாசகாலே விபரீதபுத்தி'. தேசிகர்க்கு ஏதோ விநாசகாலம் போலிருக்கிறது.

சமி. ஐயா! கோபியாதேயும். ராஜ ஆக்ஞையை அறிவுள்ள எவராலேனும் மீறலாகுமா? அதையும் மீறும்படி அவர்க்கு என்ன அவசரம் நேர்ந்ததோ? எதற்கும் பொறுமை வேண்டும் ஐயா. (வாசாலகனை நோக்கி) நல்லது. நீ, எந்த ஊருக்குத் தேசிகர் போயிருக்காங்க? எப்ப வருவாங்கன்னு கேட்டுவா, போ சீக்கிரம்.

வாசா. நாய்க்குட்டி, எசமாங்களே! அது கூடக் கேக்காமெக் கொள்ளாமெயா வந்துடுங்க?

வித். கேட்டதுக்கு என்னடா சொன்னாங்க?

வாசா. கேட்டேன் அம்மாங்களை. அந்த எளவுதாந் தெரியல்லே இன்னு சொல்லீட்டாங்க. ஆனக்கே போனா நாலஞ்சு மாசங்கூடக் களிச்சும் வர்ரது வளக்கம் தானாம்.

சமி. (தனக்குள்)சரி. இப்பொழுதுதெரிந்தது. இவர்கள்போகாத ஊர்க்கு வழி தேடுகிறார்கள். என்னை ஏமாற்ற இவர்களால் முடியாது. (வெளிப்படையாய்) அப்படியா? வித்யா பூஷணரே ஒரு சந்தேகம். தேசிகர் இக்கலாசாலை உபாத்தியாயராயிற்றே. நாலைந்து மாதங்கூட எங்கேனும் போய் விடுவது வழக்கமென்றால் எப்படி அதை நம்பக்கூடும்?

[வித்யா பூஷணன் பதில் சொல்ல முடியாமல் விழிப்பதைத் தந்திராதீநன் காண்கிறான்]

தந். ஐயா! தாங்கள் கேட்டது சரியானகேள்வியே. தேசிகரைப் பற்றிய உண்மை யறியாத எவரும் இப்படிக் கேட்பது சகஜமே. எங்கள் எல்லாரினும் தேசிகர் மகா அதிர்ஷ்ட சாலி. அவர் பிறந்தவேளை அப்பேர்ப் பட்டது. எவரினும் அவர் அபூர்வ சாமர்த்தியம் வாய்ந்தவராதலின், நினைத்த காலத்தில் நினைத்த இடத்திற்குச் சென்று, நினைத்தபோது திரும்பி வர, எங்கள் மகாராஜா அவர்கள், அவர்க்கு அநுமதி கொடுத்திருக்கிறார். இதனால் அவர் எங்கும் செல்வர். ஆனால் சென்ற சென்ற இடங்களில் அவர் சும்மா இருப்பதில்லை. தக்கோரைக் கண்டுபிடித்து அபிநய வித்தை புகட்டிக் காரியஸித்தி பெற்றே திரும்புவார். அதனாலேதான் அவர்க்கு இவ்வளவு மதிப்பும் செல்வாக்கும்.

சமி. (யோசித்து) சரி. அவரது பெருமை இப்பேர்ப்பட்டதா? நல்லது. நாலைந்து மாசமா செல்லும்? வருஷம் ஒன்றானாலும், இருந்து அபூர்வ சாமர்த்தியம் வாய்ந்த இம்மகானைத் தரிசித்தே தான் போகவேண்டும். வந்த காரியம் எப்படியேனும் நிறைவேறினால் சரி.

வித். (தனக்குள்) இவன் என்ன விடாமுண்டனாய் இருக்கிறான். யானையைக் கட்டித்தீனி போடுவதுபோல் இவன்தொலையும் வரை ஊரார் தாலியை அறுத்து இவனுக்கும் இவனுடைய பரிவாரங்களுக்கும் யாராலடா உபசாரம் செய்துகொண்டிருக்க முடியும்? (வெளிப்படையாய்) பிரபு! அவர் இன்றைய தினம்தான் புறப்பட்டுப் போயிருப்பதாகத் தெரிகிறது. தந்திராதீநர் சொல்லியதுபோல் அவர்க்கு ஒரு கிறுக்குண்டு. திடீரென்று அவர் தம்முடைய சீடர்களுக்குப் போதிக்கப் பொதிய மலைக்கும் போய்விடுவார். அங்கு சித்த புருஷர்கள் கண்டு கொண்டு விட்டார்களானால் அவர் திரும்பப் பல மாதங்களும் செல்லும். அதுதான் போகட்டுமென்றால் அங்குதான் போயிருக்கிறாரோ? அல்லது வேறெங்குதான் போயிருக்கிறாரோ? போன இடம் தெரிந்தாலும் வரவழைத்து விடலாம்.

சமி. அவர் எங்குச் சென்றாலும் சரி. எப்போழுது திரும்பினாலும் சரி. வந்தவுடன் அவரைத் தரிசித்த பிறகே நான் எனதூர் போகவேண்டும். அவர் வந்தவுடன் எனக்கு ஆளனுப்புங்கள். நாங்கள் எங்கள் விடுதிக்குச் செல்கிறோம். வந்தனம்.

[எல்லாரும் போகின்றனர்]

காட்சி முடிகிறது. —ம.கோ.

சாணக்கிய ஸாஹஸம் என்னும்

# சந்திரகுப்த சரித்திரம்.

## பதின்மூன்றுவது அத்தியாயம்.

### ராக்ஷஸனது பிற சூழ்ச்சிகளும் மறைவும்.



மறுபடியும் ராக்ஷஸன், தனக்குள், "நாம் அனுப்பிய கன்னிகைக்கும் சந்திரகுப்தனுக்கும் ஒருவேளை எவ்விதத்தாலேனும் சம்பந்தம் ஏற்படாது போய் விட்டாலும் போகலாம். அல்லது அது நிறைவேறத் தாமத மானாலும் ஆகலாம். ஆதலால் இன்னம் சில உபாயங்களைச் செய்து வைத்துக் கொள்ளலே நலம்" என்று தீர்மானித்து, நந்தர்களின் பட்டத்து யானையாகிய "கந்தமாதனம்" என்ற ஓர் யானையினுடைய மாவுத்தனை, ஓர் தனிஇடத்திற்கு வரவழைத்து, "அடா பர்ப்பரக! நம்முடைய அரசர்களுக்கு வைரியான சந்திரகுப்தன் இப்பொழுது ஜயமடைந்திருப்பதால், வழக்கப்படி பட்டாபிஷேகம் செய்யப்பட்ட அரசனைப் போல், பட்டத்து யானையின் மீது உட்கார்ந்து நகருக்குள் பவனி வருவான். அவன், கோட்டை வாயிலுக்கருகில் வரும்போது, உனக்கு ஜனச் சந்தடி யற்று, தக்க சமயம் கிடைக்கும். இதோ இந்த ஸ்வர்ண தண்டத்தில் பதித்திருக்கும், "குப்தி" என்ற சஸ்திரத்தினால், உனக்குப் பின் பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் சந்திரகுப்தனைக் குத்திக் கொன்று விட்டு, ஜனச் சந்தடியில் தப்பி ஓடிவிடு" என்று சொல்லி அவனுக்கு அளவற்ற பொருள் அளித்து அனுப்பினான்.

பிறகு, தாருவர்மன் என்ற சிற்பியை வரவழைத்து, "எஜமான விசுவாசமுள்ள நீ செய்து தீர வேண்டிய காரியம் ஒன்றுளது. அதாவது, நமது அரசர்கட்கு வைரியான சந்திரகுப்தன் அரமனை வாயிலாகப் பவனி வரும்போது, நீ இவ்வித ஏற்பாடுகளை முந்தியே அங்கு செய்து, மேல் பக்கத்தை அலங்கரித்து வைத்துத் தக்க சமயத்தில் சந்திரகுப்தனைக் கொன்றுவிடு; உனக்கு வேண்டிய திரவியங்களை எடுத்துக்கொள்" என்று அவனுக்கும் அளவற்ற திரவியங்களைக் கொடுத்தனுப்பினான்.

பிறகு, அவன் மாளிகை அதிகாரியான பவனபாலகனை வரவழைத்து, "ஆப்த நண்ப! இன்னம் ஐந்தாறு தினங்களில் சந்திரகுப்தன் அரசனாக நகருக்குள் வருவான். அவனுக்கு ஏற்ற இடம் தயாரிக்க வேண்டியவன் நீயன்றோ? அவன் தந்தை இருந்த இடம் இப்பொழுது உக்ராணமாய் உபயோகப்பட்டிருப்பதால், மிகப் பழுதுற்றிருப்பது பற்றி அவனுக்கு அது வெறுப்பாக விருக்கும். நந்தர்களின் உறைவிடமோ பதியை யிழந்த விசனத்தால் அறுபது நாழிகையும் கதறிக் கொண்டிருக்கும் போகஸ்திரீகளால் நிறைந்துளது. ஆதலின் சந்திரகுப்தன் அதை எட்டிப் பார்க்கமாட்டான். விருத்த ராஜதம்பதிகள் புத்திரசோகத்தால் தவித்துக் கொண்டிருப்பதால், அவர்களருகில் அவன் இருக்கவும் சம்மதியான். "வாணீவிலாஸம்" என்ற பகுதியோ, வித்வான்கள் சேருமிடம். ஆகையால் அதையும் அவன் உபயோகிக்க முடியாது. "ஸரஸ்வதீ பண்டார"த்தில் புத்தக அலமாரிகள் நிரம்பி இருப்பதால் கால் வைக்கவும் இடமில்லை. ஆயினும், சந்திரகுப்தன் பிரபுவாகையால் பிறர் ஜாகையி லிறங்க மாட்டான். ஆகையினால் கொலுமண்டபத்திற்குப் பின்னால் நந்தர்களின் வினோதார்த்தத்திற்காகக் கட்டப்பட்டிருக்கும் "குமார பவன"த்தை அலங்கரித்து, அதற்கு ஆறுவது கட்டில் அவனுக்குச் சயனக்கிருகம் ஜோடித்து, அங்கு சந்திரகுப்தனைச் சங்கரிக்கும்படி ஆட்களை நியமி. அவன் சயனக்கிருகம் சென்ற உடனே ராஜபவனத்திலிருக்கும் சுரங்கத்தின் வழியாகத் தப்பித்து ஓடிவிடு. நானும் இப்பொழுது அவ்வழியாகவே இந்நகரை விட்டுச் செல்லப் போகிறேன். பொக்கிஷாதிகாரியிடம் இந்த அடையாளத்தைக் காண்பித்து வேண்டுமான தனத்தைப் பெற்றுக்கொள்" என்று சொல்லி, சயனக்கிருகத்தில் சந்திரகுப்தனைக் கொல்லும் விதத்தையும் அவனுக்கு நன்கு எடுத்துரைத்து அனுப்பினான்.

பிறகு தன்னிடம் கணக்கனாயுள்ள சகடதாசனை அழைத்து, அவனிடம் சொல்லவேண்டியவற்றைச் சொன்னான். பின்னர் மாறுவேஷத்துடன் இருந்தே துப்பறிவோர்களை அழைத்து, அவர்கள் நடத்த வேண்டிய விஷயத்தையும் எடுத்துரைத்தான். அனந்தரம் தன் பரிசாரர்களுக்கு "இன்னின்ன வஸ்துக்களுடன் இன்னின்ன இடங்களில் வந்து காத்திருக்கவேண்டியது" என்று நியமித்து எல்லோரையும் அனுப்பினான். பிறகு உயிரிழந்த உடல்போலும், பரி

சுத்தமற்ற இருதயம் போலும், நேத்திர ஒளியற்ற உயிர் போலும், நந்தர்களை இழந்த சோகத்தினால் நினைவற்றுத் தடுமாற்றத்தையும், துக்கத்தையும் அடைந்துள்ள ராக்ஷஸன், ராஜபவனத்தினுள்ள சுரங்க மார்க்கமாக வெளிப்பட்டு அந்நகரைத் தாண்டிச் சென்றுகொண் டிருந்தான்.

## பதினான்காவது அத்தியாயம்.

## சாணக்யன் ராக்ஷஸனைத் தேட ஆள்விடல்.



சாணக்கியன் சபையி லுட்கார்ந்துகொண் டிருக்கும் சந்திரகுப்தனைப் பார்த்து, "ஐய அரசனே! பாடலீபுரத்திலுள்ள அதிகாரிகள் எல்லோரும் உன்னைக் கண்டுகொண்டு மரியாதை பெற்றுத் தத்தமது அதிகாரங்களில் சரிவர நடந்து கொள்வதாய் உன்னிடம் உத்திரவு பெற்றுச் சென்றார்கள். இன்னம் சிலர் தங்களைச் சேர்ந்தவர்களிடம் காணிக்கைகளை யனுப்பிச் 'சிதறி யிருக்கும் சேனைகளை ஒன்று சேர்த்துக்கொண்டு நாங்கள் பிந்தி வருகிறோம்' என்றுதெரிவித்துக் கொண்டதனால் அவர்களும் நேரில் வந்ததற்குச் சமானமாயிற்று. காரிய வசத்தால் அவர்கள் தாமதிப்பது பற்றி நாம் விக்தியாசமாக எண்ண இடமில்லை. அது இருக்கட்டும். இவர்கள் எல்லோர்களுக்கும் முக்கியனாய் ராஜ தந்திரத்தை நிர்வகித்துக் கொண்டுவரும் அமாத்திய ராக்ஷஸன் மட்டும் இதுவரையில் உன்னைக்கண்டு கொள்ளாததுடன், தன்னைச் சேர்ந்தவர்களை யனுப்பவாவது, தான் வருவதற்குத் தாமதப்படும் காரணத்தைச் சொல்லியனுப்பவாவது இல்லையே! இதற்கென்ன காரணம் என்றும் இதுவரை தெரியவில்லை" என்று சொல்லி விட்டு "அவன் எங்கு இருக்கிறான்? என்ன செய்கிறான்? என்பதை விசாரித் தறிந்து வாருங்கள்" என வேலையாட்களுக்குக் கட்டளையிட்டான்.

உடனே அவர்கள் "உத்தரவு" என்று சென்று, ராக்ஷஸன் வீட்டில் அவனைத்தேடி, அங்கு அவன் பெண்டு பிள்ளைகள் ஒருவருமே இல்லாமல் வீடு காலியா யிருப்பது கண்டு, அவனது 'ராயஸக்கார'னாகிய சகடதாஸனை விசாரித்தார்கள். விசாரிக்கவும், அவன், "ஐயன்மீர்! ராக்ஷஸரை, அவர் யுத்தத்திற்கு சென்ற பின் நான் காணவேயில்லை. எனது வீட்டு வேலைகளின் தொந்தரவினால்

சாவகாசமின்றி இன்றுதான் அவரைக் காண எண்ணி இங்கு வந்தேன். அவர் தரிசனம் கிடைக்கவில்லை. வீட்டிலுள்ள ஜனங்களையும் காணேன். இதைக் குறித்து நான் ஆலோசித்துக் கொண்டிருக்கும்போதே நீங்களும் அவரைப்பற்றி என்னைக் கேட்டீர்கள். உங்களுக்கு ஏதாவது தெரிய வந்தால் எனக்கும் சொல்லுங்கள்" என்றான்.

அதுகேட்ட அரசனது ஆட்கள் அங்கிருந்து சென்று, கோட்டைவாயில்களை காக்கும் காவலாளிகளை விசாரிக்க, அவர்கள், "நந்தர்களுக்கு ஆபத்து நேர்ந்த தினத்தில் சேனைகள் பிரமித்துத் தத்தளிக்கும் சமயத்தில் இதே வழியாக அமாத்தியர் உள்ளே சென்றார். உள்ளே சென்ற அவர் திரும்பி வரவில்லை." என்றனர். உடனே அவ்வாட்கள் தாம் எங்கெங்கு தேடக்கூடுமோ, அங்கெங்கெல்லாம் தேடினர். ஆயினும் அவர்கள் அமாத்ய ராக்ஷஸனைக் காணாது சாணக்கியனிடம் வந்து, "மகாஸ்வாமி! உத்தரவு பிரகாரம் அமாத்தியரை அவர் வீட்டிலும் இந்நகர் முழுதும் தேடிப்பார்த்தோம். அவர் தென்படஇல்லை. அவர் வீட்டிலுள்ள பெண்டு பிள்ளைகளும் அங்கில்லை. கோட்டை வாயிலி லிருக்கும் காவலர்களை விசாரித்தோம். 'யுத்தம் முடிந்து நகருக்குள் சென்றவர் இதுவரையில் வெளியே வரவே இல்லை.' என்றார்கள். அமாத்தியரின் வீட்டுக் கணக்கனை சகடதாஸனையும் கேட்டோம். அவன் 'ஐயன்மீர்! நான் இன்றுதான் இங்குவந்தேன். அமாத்தியரை அவர் யுத்தத்திற்குச் செல்லும்போது கண்டேனே யல்லாது இதுவரை காணேனே' என்றான்" என்றார்கள்.

இது கேட்டு, சாணக்கியன், "ஏவலீர்! அமாத்திய ராக்ஷஸன் நந்தர்களுக்கு ஆப்தன். ஆதலின், சந்திரகுப்தனால் தனக்குக் கெடுதல் வருமோ என்றஞ்சி இந்நகரில் தனக்கு அந்தரங்கமானவர்களிடம் தன் மனைவி மக்களை மறைத்து வைத்துத் தானும் ஏதோ ஒரு கள்ள வழியாலேயே வெளிச்சென்றிருக்க வேண்டும். சந்திரகுப்தனுக்கு நந்தர்கள்மீது பகையல்லாது இந்த அமாத்யராக்ஷஸன் மீது பகைகொள்ள நியாயமுண்டோ? அந்தப் பரம துஷ்டர்கள் மௌரியர்களை அநியாயமாய்க் கொன்றது, மகா மேதாவியும் புத்திமானுமான ராக்ஷஸனுக்குச் சற்றும் சம்மதமற்ற விஷயம். இது

சகல ஜனங்களுக்கும் தெரியும். எல்லோரும் வந்ததுபோல் தானும் அரசனைத் தரிசித்து சம்மானம் பெற்று முன்னிலும் அதிக கௌரவத்துடனும் அதிகாரத்துடனும் இருக்கவேண்டியிருக்க, தீரனாகிய இவன், இவ்விதம் பயமடைந்து ஒளிவதுஇழுக்கன்றோ? ராக்ஷஸனில்லா இந்த ஆஸ்தானம், நக்ஷத்திரங்கள் இருந்தும் சந்திரனற்ற ஆகாயம் போலும், சூர சேனாபதியற்ற சைன்யம் போலும், கம்பீரமற்ற கவிதைபோலும், ஔதாரியமற்ற ஐசுவரியம் போலும், புஜபராக்ரமமற்ற அரசனுடைய அரசாட்சி போலும், நீதி குணமற்ற மந்திரி போலும், ஆசாரமற்ற பிராமணன் போலும், பெருந்தன்மையற்ற பிரபுவைப் போலும், வித்வான்களற்ற ராஜ சபை போலும், வேதாத்தியயனமற்ற வேதியன் முகம் போலும், அரசனற்ற நாடுபோலும், ஹரிகதை யற்ற காவியம் போலும், மகப்பேரற்ற மனைவியைப்போலும், கலசமற்ற உப்பரிகைபோலும், விவேகமற்ற வித்யாப்பியாசம் போலும், விநயமற்ற வித்வான் போலும், அச்சம் நாணம் முதலியன இல்லாத வடிவழகியின் சௌந்தரியம் போலும், ஆலயமற்ற ஊர் போலுமே உள்ளது. உள்ளபடியே ராக்ஷஸனின்றி நம் சந்திரகுப்தனுடைய சபை சோபிக்கவில்லை. ஆகையால் ஊரெங்கும் தேடி அமாத்தியனைக் கண்டு நம்பிக்கை வார்த்தைகளைச் சொல்லி அவனை அழைத்து வாருங்கள். ராக்ஷஸன் சொற்படியே சந்திரகுப்தன் நடந்து அவன் விரும்பியவைகளையே நடத்துவான். இதில் சிறிதும் தடையில்லை" என்று கூறி அவர்களை ராக்ஷஸனைத் தேடிவருமாறு அனுப்பினான்.

(இன்னும் வரும்)

வி. பாலம்மாள்.

---

## விடுகதை வினாவுக்கு விடை.

---

தூயநட ராஜபுரம் சோமசந்த ரஞ்செட்டிக்
கேயவிடை யானே இயம்புகேன்—தேயமெலாம்
மீமாட்சியுற்று விளங்குவிவே கோதயமே!
'காமாச்சி' என்பதுவே காண்.

சு. நடராஜன்.

# சற்குணவல்லி.

(272-ஆம் பக்கத் தொடர்ச்சி)



## (சிறுவர்க்காகும் கதை)

சற்குணவல்லியையும் அவள் தம்பியையும் பற்றி, ஒரு விஷயமும் தன் காதில் விழாததால், இவர்களின் மாற்றாந்தாய் அவர்கள் இறந்து விட்டார்களென்றே நிச்சயித்து விட்டாள். ஆயினும் சற்குணவல்லி அத்தேசத்து அரசகுமாரனை மணந்து சந்தோஷமாய் அரமனையிற் காலம் கழித்துக் கொண்டிருக்கும் விஷயம் எப்படியோ அவளுக்குத் தெரிந்து விட்டது. அவளுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்திருக்கிறதாகவும் அவள் கேள்விப்பட்டாள். அதனால் இவளுக்குப் பொறாமை அதிகரித்து விட்டது. ஆகலின் அவள் எப்படியாவது அவளிருக்கும் அரண்மனை சென்று, அவளுக்கு இன்னும் ஏதாவது தீங்கிழைக்க வேண்டுமென்று நினைத்தாள். நிற்க.

இம் மாற்றாந்தாய்க்குக் கோரேவசனி என்னும் பெயர் வாய்ந்த ஓர் அவலக்ஷணமான பெண் உண்டு. அவள் சற்குணவல்லி இராணியாய் இருப்பதைப் பார்த்துப் பொறாமையும் கோபமும் கொண்டாள். தானும் இராணியாய் இருக்க வேண்டுமென்று ஆசை கொண்டாள். அடிக்கடி தன் தாயாரிடம் தான் அரசியாவதற்கு ஏதாவது உபாயம் சொல்லும்படி தொந்தரவு செய்து கொண்டிருந்தாள். அவள் தாய் ஒரு மந்திரவாதியன்றோ? அவள் மனம் வைத்தால் எப்படியாவது இக்காரியம் ஆய்விடும் என்று இப்பெண் நினைத்தாள்.

ஒருநாள் சற்குணவல்லிக்கு ஏதோ உடம்பு அசௌகரியம் ஏற்பட்டது. இதை அறிந்த அவளது சிற்றன்னை அரமனை ஊழியப் பெண் போல வேடம் தரித்து அந்தப்புரத்தில் சற்குணவல்லி படுத்திருக்கும் அறைக்குட் சென்று அவள் படுத்திருக்கும் கட்டிலண்டை போய்ச் சில மந்திரங்களை ஜபித்தாள். உடனே சற்குணவல்லியின் அழகும் இளமையும் எங்கோ போய் விட்டன. ஓர் வயது முதிர்ந்த கிழவியைப் போல் அதி அவலக்ஷணமாகிவிட்டாள். சிற்றன்னை இவளைப் பக்கத்து அறையில் பூட்டி வைத்து இரவில் தான் வெளியே விடுவாள். அரசி படுத்திருந்த பழைய இடத்தில் தன் மகள் கோரேவசனியை அவள் படுக்கச் செய்து, தன் மந்திர சக்தியால் சறகுணவல்லி போல் பார்ப்போர் கண்ணுக்குப் புலப்படும்படி செய்து விட்டாள். ஆனால் கொரேவசனிக்குக் கண் ஒன்றுதான். இதை அரசன் கண்டு கொண்டால் நடந்த விஷயங்களை அறிந்து, தகுந்த தண்டனையும் விதிப்பானென்று பயந்து, தன் மகளைக்

கண்ணில்லாத பக்கத்தைக் கீழே வைத்துப் படுக்கும்படி செய்து தானும் அவ்வறையில் ஓர் மூலையில் ஒளிந்து கொண்டிருந்தாள்.

அரசன் பகல்முழுதும் வேட்டையாடிக் களைத்து இருட்டும் தருணத்தில் அரண்மனை வந்தடைந்தான். உடனே தன்மனைவியைப் பார்ப்பதற்கு அவளிருக்கும் அறைவந்தான். அவன் அறைக்குள் நுழையவும், ஒளிந்திருந்த சிற்றன்னை வெளியே வந்து, 'அரசி அப்பொழுதுதான் அயர்ந்து தூங்குகிறாள்' என்றும், 'அவளை எழுப்பலாகாது' என்றும் கூறினாள். அரசன் உடனே அவ்வறையை விட்டுச் சந்தடிசெய்யாமல் போய்த் தன் மகன் படுத்திருக்கும் அறைக்குட்சென்று குழந்தையை முத்தமிட்டு, தன்னறைக்குட் சென்றனன்.

சற்குணவல்லி, இரவில் நடுஜாமத்தில் தன் அறையை விட்டுப் புறப்பட்டு, தன் மகன் படுத்திருக்கும் இடத்திற்குப் போய்ச் சேர்ந்தாள். இவள் கிழ வயதுடையவள் போலத் தோற்றினும், தாதி இவளை இன்னாளென அறிந்து கொண்டாள். இவள் தன் மகனைத் தொட்டிலினின்றும் எடுத்து அன்புடன் முத்தமிட்டு மறுபடியும் அதைத் தொட்டிலிலிட்டுச் சென்றாள். மான்கன்று படுத்திருக்கும் இடத்திற்கும் சென்று, அதைத்தடவிக் கொடுத்து விட்டு, அவ்வறையை விட்டு வெளியே போனாள். இவ்வறையின் எல்லாக் கதவுகளும் ஜன்னல்களும் மூடப்பட்டிருந்தமையால், சற்குணவல்லி எவ்வாறு அறையைவிட்டு வெளியே சென்றாளென்று அத்தாதிக்குப் புலப்படவில்லை.

பொழுது விடிந்தவுடன் அத் தாதி, கீழே அந்தப்புர வாயில் காப்போரிடம் சென்று, "இரவில் யாராவது அந்தப்புரத்தில் நுழைந்தார்களோ?" என்று கேட்டாள். அதற்கு அவர்கள் தாங்கள் ஒருவரையும் பார்க்கவில்லையென்றும், அதி ஜாக்ரதையாய்த் தாங்கள் கவனித்துக் கொண்டிருப்பதால் தங்களை அறியாமல் எவரும் போயிருக்க முடியாதென்றும் கூறினர்.

சிலநாட்கள் கழித்து ஒருநாளிரவில் இதேமாதிரியாக சற்குணவல்லிவந்து சென்றனள். இவள் வரும்பொழுதெல்லாம் தாதி விழித்துக்கொண்டே தான் இருப்பாள். ஆனால் அவள் கண்டதை அரண்மனையில் ஒருவரிடமும் கூறவில்லை. இப்படியிருக்கையில் ஒருநாள் சற்குணவல்லி தன் குழந்தையையும் மான்குட்டியையும் நோக்கிச் சிலவார்த்தைகள் சொன்னாள். இதை இத்தாதி நன்றாய்க் கேட்கமுடியவில்லை. ஆயினும் அவள் "கண்மணிகளே! உங்களைப் பார்க்க இன்னும் இரண்டுதரம் தான் நான் வரமுடியும்", என்று இரங்கிப் பாடிய ஒருசிறு பாட்டு தாதி காதில் விழுந்தது. ஆயினும் அவள் பேசமுடியவில்லை; ஏனென்றால் மந்திரவாதியா

கொடிய சிற்றன்னை இவளைத் தன் வஞ்சகம் எங்கு இவள் மூலம் வெளிப்படுமோ என்றஞ்சி, பேசமுடியாமல் செய்து விட்டாள்.

மறுநாட்காலையில் அத் தாதி தான் இரவில்கண்ட விஷயங்களை அரசனிடம் ஒன்று விடாமல் ஜாடையாய் அறிவித்தாள். இதைக் கேட்ட அரசன் ஒன்றும் தோன்றாமல் கொஞ்சநேரம் பிரமித்து நின்றான். பிறகு தானே அன்றிரவு தன்மகன் பக்கத்தில் ஒளிந்திருந்து பார்க்க வேண்டுமென்று தீர்மானித்து, அவ்வாறே தன் குழந்தையின் படுக்கையறையில் ஒளிந்து இருந்தான். எப்போதும் போல அவ்வறையின் ஜன்னல்களும் கதவுகளும் மூடப்பட்டிருந்த போதிலும் சற்குணவல்லி வழக்கப்படி உள்ளே வந்தாள். வந்ததும் குழந்தையையும் மான்கன்றையும் பார்த்துத் தான் இன்னும் 'ஒருமுறை தான் பார்க்க வரமுடியும்' என்னும் கருத்தமைத்து ஓர் கீதம் பாடி அவ் வறையை விட்டகன்றனள். அரசன் ஒன்றும் பேசாது மறுநாளிரவும் வந்து பார்க்கவேண்டுமென்ற தீர்மானத்துடன் சென்றான்.

மறுநாளும் அவளது வரவை எதிர் பார்த்து அரசன் முன் மாதிரி ஒளிந்துகொண்டிருந்தபோது, சற்குணவல்லி வழக்கம்போல் நடுச்சாமத்தில் உள்ளே நுழைந்தாள். அன்று அவள் குழந்தையைப் பார்க்க 'இனிமேல் தன்னால் வரமுடியாது' என்னும் கருத்தடங்கிய ஓர் பாட்டுப் பாடினள். இதைக்கேட்டதும், அரசனுக்கு ஆறாத் துயரம் பெருகியது. அவள் அறையினின்றும் அகலுமுன்னமே அவன் விரைந்தோடி அவளது கையைப் பிடித்துக்கொண்டான். கொண்டதும், அவன் அவளை நோக்கி, "நீதான் என் மனைவி. உனக்கு யார் இத் தீங்கு விளைவித்தது? மந்திரவாதியின் மாயமே இது. இங்ஙனம் உன்னைச் செய்தது யார்? சீக்கிரம் சொல்" என்று வேண்டினான்.

சற்குணவல்லி, தன் மாற்றாந்தாயே தன் சகோதரன் மான்கன்றானதற்கும், தான் இந்த ஸ்திதியடைந்ததற்கும் காரணம் என்பதை விளங்கக் கூறினள். உடனே அரசன் கோபித்துச் சிற்றன்னையையும் அவள் மகளையும் அழைத்து வரும்படி கட்டளையிட்டான். அவர்கள் வந்து சேர்ந்ததும் உடனே அரசன் அவர்களைக் கொல்லும்படி கட்டளையிட்டனன். ஆயினும் சற்குணவல்லி தன் புருஷன் காலில்வீழ்ந்து, அவர்களுக்கு உயிர்ப்பிச்சைதருமாறு வேண்டினாள். அரசன் மனமிரங்கி அவர்களுக்கு வெவ்வேறு தண்டனைகள் விதித்தான். சிற்றன்னையும் சற்குணவல்லியின் குணத்தை மெச்சினாள். அத்துடன் அவளது மந்திர பலமெல்லாம் போய் விட்டது. போகவே, அம் மான்கன்று ஓர் யௌவன புருஷனாக ஆகி விட்டது. சற்குணவல்லி மறுபடியும் பேரழகுடன் விளங்கினாள். பிறகு இவர்கள் எல்லோரும் சுகமாய் நெடுங்காலம் வாழ்ந்திருந்தனர். சுபம்!

ஜா, தகுந்

ரா. நாகசாமி.

உ

# "கல்விச்சிறப்பு"



1 வல்லாரே ஆயினும் வாய்ந்தகலை கல்லாரேல்
பல்லோருந் தூற்றிப் பழித்திடுவர்—நல்லாய்!கேள்
கல்வியைப்போல் மேலாங் கருந்தனமொன் றில்லையென்றே
எல்லாருஞ் சொன்னார் இசைந்து.

2 எண்ணும் எழுத்துமிவை எல்லார்க்குங் கண்ணாகும்;
திண்ணம். இது நன்கறிதி சேயிழையே!—ஒண்டனத்தைப்
பெற்றார்க் கிரும்பெருமை யில்லை. இயலுலகில்
கற்றார்க் கிலையோ கழறு.

3 வானிற் பலகோடி, வாண்மீன் இலகிடினும்
ஈன இருளகற்றல் ஏயுமோ?—தூநகையே!
கல்லார் இகழ்ச்சிபெறக் கற்றோர் மதிநேர்வர்
கல்லா தவர்நடுவே காண்.

4 ஆயுள் மிகச்சிறிதால் ஆங்கதனோ டேலநனி
காயும் விடம்போன்ற கட்டுளவால்,—சேயிழையே!
சீருடனே செல்வம் சிறந்தழி யாமையுற
நாருடனே கற்பாய் நயந்து.

5 கற்றோர்முன் இல்லையே கட்டுக்கள் ஆதலினால்
கற்றோர்முன் காணலாம் கண்ணியமே!—முற்றிழையே!
கற்றாரைக் கூடிக் கழிமடமை காலறுப்பான்
சுற்ற வரையே சுரந்து.

6 தீயவரும் கல்விச் சிறப்புற்றால் மற்றவரைத்
தூயவரென் றெண்ணியே துன்னிடுவார்—ஆயுங்கால்
சேர்ந்தாரை வாழ்விக்கும் தீங்கல்வி தன்சிறப்பால்
நேர்ந்ததே யெப்பொருளும் நேர்.

7 தீயினால் வேகாது தீயர்கொளச் செல்லாது
பாய்கின்ற வெள்ளத்திற் பாயாதால்—ஆயிழையே!
ஏதுங் குறையதனை ஏலாதிக் கல்வியென்
ஓதுவேன் உண்மை யுணர்வு.

8 கவிதை பலவாகக் கட்டலாம் கற்றோர்
கவிதைப் பொருளெடுத்துக் காட்டி—நவையில்
பெரியோர் கருத்தறிந்து பேணலாம் செய்தற்
கரிய புரியலாம் ஆய்ந்து.

இ. ஸ்ரீ. கோவிந்தன்,
மாணவன், கல்விக்கழகம், இளசை.

ஓம்: சரவணபவாயநம:

# திருக்கார்த்திகைப் பதிகம்.

1. திருக்கார்த் திகையிற் றெரிசித்த பேர்கட்(கு)
இருக்கா தொருக்காலும் இன்னல்—இருக்காதி
வேதத் தனிமொழியை வித்தகற்குச் சொற்றகுரு
நாதன் மலர்ச்சரணை நன்கு.

2. சத்திவடி வேலன் தயாநிதி யென்றெண்ணிப்
பத்தியுடன் ஏத்திப் பணிந்திடவே—இத்தருணம்
வாருங்கள். எல்லோரும் வந்தவுடன் தந்தருள்வன்
பாருங்கள் இன்றே பலன்.

3. செங்கமலம் போலத் திகழ்வுற் றிடுமுகத்துக்(கு)
எங்குமிணை காணா எழில்பெற்றுத்—துங்க
மயிற்பரியில் ஏறி வருமுருகற் கென்றும்
இயற்கைக் குணமிரக்க மே.

4. உள்ளக் கவலை யொழிமின்; குறமின்னைக்
கள்ளத் தனமாக் கவர்ந்தோடி—விள்ளரிய
சீர்த்தணிகை மாமலையிற் சென்றவனைச் சென்றடைமின்.
கார்த்திகையிற் கண்குளிரக் கண்டு.

5. நன்மை யளித்து நறுமலர்கொண் டர்ச்சிப்பார்க்(கு)
இன்மை யகற்றி யிடர்நீக்கித்—தொன்மை
வினைத்தொகையைச் சுட்டெரிக்கும் வேல்முருகன் தானே
அனைத்துலகும் போற்றும் அறிந்து.

6. தாயர் அறுவர் தடமுலைப்பால் உண்டதிரு
வாயன் மயின்மேல் வருகின்றான்—நேயமுறக்
காண்மின் உலகீர்! களிமின். அடிக்கமலம்
பூண்மின் சிரமேற் புகழ்ந்து.

7. வாசக் குழலி வனசரர்கோ மான்மகளை
நேசிக்கும் எந்தை நிமலன்றாள்—பூசிக்கும்
அன்புடையார் கண்ணே அவனருள்வந் தெய்திடப்பே
ரின்பமலால் துன்பமென்றும் இல்.

8. பார்த்த விடத்துப் பழவினையெ லாம்பறக்கும்
சீர்த்தியெலாம் மிக்கத் திகழுமே—கார்த்திகையிற்
கந்தன் அடியைக் கருதித் தொழுமடியார்க்(கு).
எந்தவுல கும்புகழ வே.

9. அரியும் அயனும் அடிமுடியைத் தேடித்
தெரிய அரியமக தேவற்(கு)—உரியதினம்
இன்றே யொளிமயமா யெவ்வுலகுங் கண்டுதொழற்(கு)
இன்றே உவந்தான் இறை.

10. திருக்கார்த் திகையில் திருமுருகற் பேணி
இருக்காறும் முக்காலும் ஏத்தித்—திருக்கோலங்
கண்டவர்க்கு முண்டோ கலிநோய்? அவனருளைக்
கொண்டவர்க்கு முண்டோ குறை?

11. எவனோ வுரைத்தானென்(று) எளனஞ் செய்யாமல்
அவனுரையென் றேகண் டறிந்து—சிவநேயச்
செல்வர்காள்! கந்தன் திருவடியைக் காண்மினருள்
நல்குவான் நம்பால் நயந்து. —குமரதாஸன்.

---

சோழவந்தானூர் அரசஞ் சண்முகனூர் இயற்றிய

## வள்ளுவர் நேரிசை.



(244–ஆம் பக்கத் தொடர்ச்சி.)

பதினோராவது அத்தியாயம்.

### செய்ந்நன்றியறிதல்

கன்னன், தனக்குக் கனிந்தரசு நல்கியதும்
மன்னற்(கு) உயிர்அளித்தான் வள்ளுவரே!—என்னேயோ?
செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது. (க)

(அ–ம் முதலியன):—கனிந்து–மனங்கசிந்து, அரசு–வங்கதேசத்தை, மன்னன்–துர்யோதனன், செய்யாமற் செய்த உதவி–ஒருவன் தனக்குப் பிறன் எவ்வித உதவியும் செய்யாமலிருக்க அவனுக்குத் தானே வலியச் செய்த உதவி, ஆற்றல்–ஈடாதல்.

கன்னனுக்குத் துர்யோதனன் அரசளித்தது:—சூரியனது அநுக்ரகத்தால் குந்தியிடம், அவளது கன்னிப் பருவத்தில் தோன்றிய கன்னன், அவளால் பேழையி னுட்செறித்துப் பேராற்றிற் போக்கப் பட்டதும், அங்ஙனம் போக்கப்பட்டவனை அரமனைச் சாரதி எடுத்து வளர்த்ததும், முன்பு அறிவித் துள்ளோம். சாரதியின் மனைவியாகிய ராதை அவனை வளர்த்தமையால் 'ராதேயன்' என்றும், கன்ன(காது) குண்டலங்களுடன் பிறக்கும்போதே தோன்றினமையாற் 'கன்னன்' என்றும், இவனுக்குப் பெயர். இவன் ஆதிமுதல் அர்ச்சுனனைப் பகைத்தும்,பிற பாண்டவர்க்குப் பிரதிகூலமாகவேநடந்தும் வந்ததால், ராஜாதிராஜனான துரியோதனன் அவனது தோழமையை வலியப் பெற்றான்.

ஒருநாள் பாண்டவரும் கௌரவரும் தாம் கற்ற அஸ்திர சஸ்திர வித்தைகளை அரங்கேற்றிய போது, அர்ச்சுனனது அபூர்வ சாமர்த்தியம் கண்டு யாவரும் மெய்ச்சினர். துர்யோதனன் இது பொறாது துக்கித்து நிற்கையில், சுத்த க்ஷத்திரியனாயிருந்தும் நீறுபூத்த நெருப்பென இருந்த கன்னன் எழுந்து, யாவரையும் நோக்கி, "அர்ச்சுனன் செய்ததைப் பிரமாதமாகக் கொண்டாடுகிறீர்களே. என்சாமர்த்தியத்தைப் பாருங்கள்" என்று கூறி அர்ச்சுனனிலும் அதிசாமர்த்தியம் காட்டினான். அது கண்ட அரசர் முனிவர் யாவரும் பற்குனனைப் புகழ்ந்ததினும் இவனைப் பதின் மடங்கு புகழ்ந்தனர். துரியோதனன் பெருமகிழ்ச்சியுற்றான். அர்ச்சுனன் வெட்கித் தலைகவிழ்ந்தான். புகழ்ச்சியுற்ற கர்ணன் அத்துடன் அமையாது வீராவேசங்கொண்டு அர்ச்சுனனை நோக்கி, "வருகிறாயா? நேருக்குநேர் ஒரு கை பார்ப்போம்" என்று சண்டைக் கழைத்தான். அர்ச்சுனன் சினந்து, "வின்மையிற் சிறந்த வீர! நான் தயார். ஆயினும் ஒரு காரியத்திற்கு விசனிக்கிறேன்: கேவலம் எங்கள் தேர்ப்பாகனது வளர்ப்புப் புத்திரனான உன்னுடன் உலகாதிபனான ராஜபுத்திரனாகிய யான் போரிடல் தகுதியின்றே" என்று வெறுப்பும் இகழ்ச்சியும் தோன்றக் கூறினான். இது கேட்ட கர்ணன் கடுங்கோபங் கொண்டு "அர்ச்சுனா! 'ஆக்கும் அறிவான் அலது பிறப்பினால் மீக்கொள் உயர்வு இழிவு வேண்டற்க'. என்னைச் சாதியீனனென்று இழித்துக்கூறிய நின் முகக் கமலத்தைக் கொய்து, இதோ அரங்கபூஜை செய்கிறேன்." என்று வில்வளைத்தான். உடனே அர்ச்சுனன் அவனிலும் அதிகோபங் கொண்டு "என்னைக்கொல்ல நீ உயிருடன் இருந்தால், அப்பொழுதன்றோ நீ சொல்வது நிறைவேறும். அதற்குள் உன் சிரத்தைக் கொய்யாவிடில் நான் க்ஷத்திரியனல்லன்" என்று தானும் வில்வளைத்து நாணேற்றினான். கௌதம மகரிஷி இருவர்க்கும் நன்மொழி கூறி அவர்கள் கோபமாறச் செய்துகொண் டிருக்கையில், பீஷ்மர் முகம் சுளித்துச் சபையோரை நோக்கிக் "குருகுலமக்கள் நூற்றைவரே தம்வித்தையை அரங்கேற்றக்கூடிய இடம் இது. இவ் வீராசகுமாரர்களுக் குரிய இடத்தில், கேவலம் தேர்ப்பாகன் மகனான கர்ணன், தான் கற்ற வித்தையைக்காட்ட வந்ததே தவறு. "வித்தை எல்லோர்க்கும் பொதுதானே" என்ற விசால புத்தியுடன் நாம் சரியென்று ஒப்புக்கொண்டு அனுமதியளித்தோம். யாவரும் மெச்ச இவன் தன் வில் வல்லமையைக் காட்டினான். அத்துடன் அன்றோ நிற்கவேண்டும்? அரசகுமாரனை அவன் போர்க்கழைத்தது என்னநியாயம்? அர்ச்சுனன் கூறியதில் என்ன தவறு? அதற்காக இவன் அவன் முகத்தாமரையைக் கொய்து அரங்கபூஜை செய்கிறேன் என்று சொல்வது எவ்வளவு அடாதபேச்சு" என்று கோபித்தனர். அவர் கூறி முடிந்ததும், கிருபர் எழுந்து அவர் சொல்லியதைத் திரும்பவும் சொல்லிக் கர்ணன் செய்கையைக் கடிந்துரைத்தனர். பீஷ்மருக்கஞ்சி வாயடங்கி நின்ற துர்யோதனன், கிருபர் வாய் திறந்ததும் வெகுண்டு. அவரை நோக்கி, "அந்தணோத்தம! நன்றுகூறினீர். கர்ணனை இழிகுலத்தானென்று நீர் பேசியது எவ்வளவு மடமையைக் காட்டுகிறது! நல்லோர்கள் எங்கே பிறந்தாலுமென்?

கற்றவர்க்கும், நலம்நிறைந்த கன்னியர்க்கும் வண்மைகை
யுற்றவர்க்கும், வீரனென் றுயர்ந்தவர்க்கும் வாழ்வுடைக்
கொற்றவர்க்கும் உண்மையான கோதில் ஞான சரிதராம்
நற்றவர்க்கும் ஒன்றுசாதி. நன்மைதீமை இல்லையால்.

பிறப்பு காரணமாகக் கர்ணனை இகழும் கிருபரே! திருமால் பிறந்தது கருங் கற்றூணிலன்றோ? சிவன் பிறந்தது மூங்கிலிலன்றோ? கடல் குடித்த குறு முனியும், ஈங்குள்ள துரோணரும் கேவலம் கும்பத்திலன்றோ பிறந்தவர் கள்! முருகக் கடவுள் பிறந்தது தருப்பைப் புல்லிலன்றோ? சுவாமிகளே! தங்களுடைய யோக்கியதைதான் என்ன? தங்கள் உற்பத்தி ஸ்தானம் தாங்களே அறியாதிருக்கக் கர்ணனை நிந்திக்கப் புறப்பட்டுவிட்டீர்களே. உங்களையெல்லாம் நாங்கள் கேவலப் பிறப்பெனக் கருதி இகழ்கின் றேமா? தாழ்பிறவியுற்றும் பெரியோர்களில் ஒருவராக மதிக்கப்படும் நீங் கள் இங்ஙனம் பேசியது தகுதியா? தேரோட்டி மகன் தாழ்ந்தவனென் றும், அவனிகாவலன் உயர்ந்தவன் என்றும் அல்லவோ கருதி நீரும் நும்போன்றோரும் பிதற்றுத பிதற்றினீர்கள். இக்கணமே அவனை அரச னாக்கி விடுகிறேன் "ந விஷ்ணு ப்ருதவீபதி". வணங்குமின் யாவரும், என்று கூறி அந்நிமிஷமே கர்ணனை, அரசில்லாதிருந்த அங்கதேசத்துக்கு அரசனாக்கிச் சபையோரறிய மகுடாபிஷேகம் செய்து, அவனுக்குச் செங் கோல் ஆழி முதலியன ஈந்தான். இக்கன்னன் துர்யோதனனுக்கு உயிரளித் தது வள்ளுவர் நேரிசை 8-வது அதிகாரம் 1-வது செய்யுளை விளக்கக் கூறிய விஷயத்தாலும் பாரதக்கதையாலும் அறிக. —ம. கோ

## சமாசாரக் கொத்து.



மேலர்ய்க்குடி தமிழ் அபிவிருத்திக் கந்தவேள் சங்கத்தின் நான்கா வது வருஷபூர்த்தி மஹோத்ஸவம் நவம்பர் 23உ சனிக்கிழமை ஷை யூர் ஷண்முகபுரத்திற்கடுத்த விஜயமண்டபத்தில், ஹரித்வாரமங்கலம் ஸ்ரீமான் வா. கோபாலசாமி ரகுநாத ராஜாளியாரது அக்ராஸநத்தின்கீழ் வெகுவிம ரிசையுடன் கொண்டாடப் பட்டது. அச்சமயம் 'ஜீவகாருண்யம்' 'கொடிக் கால்' 'பக்தி' 'ஊழியம்' 'தந்தை மகற்காற்று நன்றியும், மகன் தந்தைக் காற்று நன்றியும்' 'செல்வம்' 'அறம்' 'கம்பர் கவித்திறம்' 'விக்ர ஆரா தனம்' முதலியவைகளைப் பற்றி ஸ்ரீ: வி. காசிவிசுவநாதபிள்ளை, ஏ. கண் ணுசாமிப் பிள்ளை, சேஷாத்திரி ஐயங்கார், எம். ராமநாதபிள்ளை, ம.கோ பாலகிருஷ்ணையர், ஏ. சுந்தரராஜையங்கார், ஏ. மோஸஸ், பி. சிவசாமி சேர்வை, சுந்தரம் செட்டியார் முதலியோர்கள் பிரசங்கித்தனர். "மகன் தந்தைக் காற்றும் உதவி"யைப் பற்றிய தமது பிரசங்கம் முடிந்ததும், ஸ்ரீ ம. கோபாலகிருஷ்ணையர் பின்வருமாறு அக்ராஸநரையும் சபையையும் வாழ்த்தினர்:—

"இவன்தந்தை என்னோற்றான்! என்னோற்றான்!"
என்றெவரும் இறும்பூதெய்த
உவந்தெங்கும் உதவிசெய ஹரித்வார
மங்கலமுன் உளுற்று மேலாந்
தவந்தந்த கோபால சாமிரகு
நாதரா ஜாளி! நீயும்
நவந்தந்த வேணு சா மியும்பிறரும்
இச்சபையும் நாளும் வாழி!

எட்டப்ப ஞாபகார்த்த தமிழ்ச் சங்கத்தின் இரண்டாவது வருஷ பூர்த்தி மகோத்ஸவம் மதுரை மாணவர் செந்தமிழ்ச் சங்கத்தலைவரும் "விவேகோதயம்" பத்திராதிபருமான தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீம. கோபால கிருஷ்ணையரது அக்ராஸநாதிபத்தியத்தின் கீழ் டிசம்பர் மீ 22உ சனிக் கிழமையன்று நடைபெறும். விபரம் அடுத்த சஞ்சிகையில் வரும்.

ஸ்ரீ வைகுண்டம் வக்கீலும், சேர்மனும் பொது நன்மையிற் கண்ணும் கருத்து முடையோருமான ஸ்ரீமான் எஸ். டி. பொன்னம்பலநாத முதலியார், திருநெல்வேலி சிவதேவஸ்தான கமிட்டி மெம்பராகத் தெரிந்தெடுக்கப்பட் டிருப்பதறிந்து மகிழ்கின்றேம். —பத்திராதிபர்.

## புத்தக மதிப்புரை.

**தோத்திரப் பாமாலை:**—இது வேலூர் போலீஸ் ஸ்கூலைச் சேர்ந்த ஸ்ரீ வி. சுப்பையர் இயற்றியது. சர்வ சமய தெய்வ வணக்கப் பாக்களுடன் தொடங்கி யுள்ளது இது. இந்நூல் வெவ்வேறு சந்த இன்பங்கொண்டு வெவ்வேறு கடவுளரைத் துதிக்கும் பக்திநூலாகும். ஆந்திரவகுப்பினராய், ஆங்கிலத் தேர்ச்சியுற்றும், அதிசீக்கிரத்தில் யாப்பியலுணர்ந்து கவி பாடும் தன்மையும் வன்மையுமுற்ற இவரது சாகித்ய சக்தியை வியக்கிரேம். விலை அணு6. வேண்டுவோர் ஆக்கியோர்க்கு எழுதுக. —பத்திராதிபர்.